ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணபரப்பிரம்மணே நம:

# ஸ்ரீமத் மஹாபாகவதம்.

## பிரதமஸ்கந்தம்.

### திருமால் துதி.

**தரவு கொச்சகக்கலிப்பா.**

*சீர்பூத்த பரஞ்சுடராய்ச் சித்தாகிக் கானலிடை*
*நீர்பூத்த தெனவுலக நிறைந்தொளிதன் பாற்றோன்ற*
*ஏர்பூத்த முத்தொழிலு மினிதியற்றித் தனிநின்ற*
*கார்பூத்த திருமேனிக் கடவுண்மல ரடிநினைவாம்.*

**என்பது** - சிறப்புப்பொருந்திய பரஞ்சோதிஸ்வரூபமாய் ஞானமயமாகிக் கானலிடத்தில் நீருண்டானதுபோல் உலகத்து வியாபியாய்ச் சுத்தசைதன்ய வொளி தம்மிடத்துண்டாக அழகுற்ற சிருட்டி திதி சங்காரங்களாகிய முத்தொழில்களும் உலகத்துயிர்கள் செம்மையுறும்படி செய்து தாம் அவற்றினும் பொருந்தாமல் தனித்துநின்ற நீர்கொண்ட மேகம்போற் றிருமேனியையுடைய ஸ்ரீகண்ணபிரானுடைய தெய்வத்தன்மைபொருந்திய செந்தாமரை மலரையொத்த திருவடிகளை மனதில் தியானிப்போம். **என்றவாறு.**

---

### நம்மாழ்வார் துதி.

**அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.**

*சிந்தகத்துக் கீழமர்ந்து திருமதுர கவியடிகள் சிந்தை யுட்க*
*சிந்தகத்துப் பேரின்பக் கடல்கோப்பத் திரைப்புணரி திவள்வெண் முத்துச்*
*சிந்தகத்து மன்னுயிர்க ளொருபெருவீ டடையுநெறி தெருண்டு சூழ்வி*
*சிந்தகத்து மலமறச்செந் தமிழ்மறைசொல் பெருமுனிதாள் சிந்தித் துய்வாம்.*

**இதன்பொழிப்புரை.** புளியமாத்தி னடியிலே யெழுந்தருளி யிருந்து சிறந்த மதுரகவி யாழ்வார் நெஞ்சினிடம் உருகி அம்மனத்திலே பேரின்ப வெள்ளம் நிரம்பப் பெறும்படியாக அலைகளையுடைய கடல் (புடைசூழ்ந்து) ஒளிபிறழ்கின்ற வெண்ணிறமான முத்துக்களைக் கொழிக்கப்பெற்ற பூமியிற் பொருந்திய ஜீவாத்மாக்களெல்லாம் ஒப்பில்லாத பெரிய பரமபதத்தை யடையும்படியான வழியை ஆராய்ந்தறிந்து (உலகத்தாருடைய) பாவமாகிய அழுக்கு (அவ்வுயிர்களைச்) சூழ்தல்நீங்கி ஒழியும்படி (வடமொழி) வேதங்களின் பொருள்முடிவை சுத்தமான தமிழ்ப்பாஷையினாற் சொல்லியருளிய சிறந்த சடகோபமுனிவரது திருவடிகளை தியானித்துப் பிழைப்போம். **எ-று.**

## முதலாவது அத்தியாயம்.



### சுலோகம்.

*வியாசம் வசிஷ்டநப்தாரம் சக்தேபௌத்ர மகல்மஷம்*
*பராசராத் மஜம்வந்தே சுகதாதம் தபோநிதிம்.*

*வியாசம் - வியாசபகவானை, வசிட்டநப்தாரம் - வசிட்டமுனிவருக்கு இரண்டாம் பேரனை, சக்தேபௌத்திரம் - சக்திக்கு முதற்பேரனை, அகல்மஷம் - களங்கமற்றவனை, பராசராத்மஜம் - பராசரருக்குப் புத்திரனை, சுகதாதம் - சுகருக்குத் தகப்பனானவனை, தபோநிதிம் - தவத்திற்கு உற்பத்தித்தானமானவனை, வந்தே - நமஸ்கரிக்கின்றேன்.*

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

*பிறந்தபொழு தேதுறந்து பிறைக்குழவி போனடிப்பப்*
*பின்போய்த் தொன்னூ*
*லறைந்தபுகழ் வியாதமுனி யாதரத்தான் மதலாயென்*
*றழைப்பச் செவ்வாய்*
*திறந்துநறை பொழியுமலர்ச் செழுந்தருவு மேனென்ன*
*வுயிர்க ளியாவு*
*நிறைந்துறையுஞ் சுகமுனிவ னிரையிதழ்த்தா மரைமலர்த்தா*
*ணினைதல் செய்வாம்*

*ஸ்ரீமகாபாகவத கிரந்தத்தில் உபோத்காதமென்னப்பட்ட பீடிகாரூபமான முதல் ஸ்கந்தத்தினுடைய முதல் அத்தியாயத்திலே நைமிசாரண்யவாசிகளான சவுனகாதிமுனீச்வரர்கள், விடியற்காலத்திலே பண்ணத்தக்க அக்கினிஹோத்திரமுதலான வைதீக கருமத்தையுடையவர்களாய்ச் சூதபுராணிக உத்தமரை நன்றாகக்கொண்டாடி அந்தந்த இதிகாசபுராணங்களிலே உம்மாலே புருஷர்களுக்கு முதற்காரணமாக எது நிச்சயிக்கப்பட்டதோ அதைச் சொல்லவேண்டுமென்றும், மனுஷியர்களுக்குத் திரளாகக் கேழ்க்கத்தக்கவைகளுக்குள்ளே சாரமாயிருக்கப்பட்டதைப் புத்தியினாலே நன்றாகக் கிரகித்துச் சொல்லவேண்டுமென்றும், முத்திவிருப்பமுள்ளவர்களுக்கு மோட்சத்தைக்குறித்த சாதனமேதென்றும், யாதொரு பகவானுடைய அவதாரம் பிராணிகளுடைய காத்தற்பொருட்டும் ஐசுவரியத்தின்பொருட்டும் ஆகக்கடவதோ அப்படிக்கொத்த மகாபுருஷனுடைய அவதார கதாசரித்திரங்க ளெவையென்றும், ஸ்ரீகிருஷ்ணபகவான் தேவகியினிடத்திலே எதுக்காக அவதரித்தாரென்றும், கிருஷ்ணன் வேறுலோகத்தை அடைந்திருந்தகாலத்தில் தருமம் யாரைச் சரணமாகப்பற்றிற்றென்றும் இவை முதலான ஆறுவினாக்களைக் கேட்டனரென்றும் சொல்லப்பட்டது.*

*ஸ்ரீவேதவியாசமுனிவர் ஒன்றோடொன்று கலந்து பயனில்லாமலிருந்த வேதங்களை வெவ்வேறாகப் பிரித்து, அவற்றின்பொருள்களைச் சகல சீவாத்மாக்களும் அறிந்து கடைத்தேறவேண்டிப் புராணங்களாகவும், இதிகாசங்களாகவும், இரண்டுவகையாக வெளியிட்டுத் தம்முடைய வர்ணாச்சிரமங்களுக்கு யோக்கியமான நித்திய நைமித்திய கருமங்களினாலே ஸ்ரீபகவானை ஆராதனஞ்செய்து பரிபூரணமாகவிருந்த அறிவிற்கும் உலகத்துக்குத் தாம்*

செய்யவேண்டிய உபகாரம் இன்னமுஞ் சிலகுறையுண்டாக இருக்கிறதென்றும், தாமே தெரிந்துகொண்டு அதின் விவரங்காணாமற் சிந்தித்துக்கொண்டிருந்த சமயத்தில், பிரமலோகத்திலிருந்து நாரதமுனிவர்வந்து இவரைப் பார்த்து, ஓ வியாச முனிவரே! உம்முடைய மனதிலே என்னமோ சிந்தித்துக் கொண்டிருக்கின்றீர், அதைச்சொல்லுமென்று கேழ்க்க, வேதவியாசர் நாரதமுனிவரைப்பார்த்துச் சொன்னதாவது: ஓ நாரதமுனிவரே! நான் இதுவரையிலும் நடந்துகொள்ளவேண்டிய வர்ணாச்சிரம தருமங்களை நடத்தினேன், வேதங்களைப்பிரித்து அவற்றின்பொருள்களையும் வெளியிட்டேன், பிராகிருத தர்மங்களைப் பிரகாசப்பண்ணின லோகோபகார நிமித்தமாகப் பாரதத்தினுடைய முடிவிலே ஹரிவம்சத்தினாலே ஸ்ரீமந்நாராயணனுடைய திவ்ய குணாதிசயங்களையும் வெளியிட்டு லோகோபகாரத்தையுங் கற்பித்தேன். நான் இப்படியெல்லாஞ் செய்திருந்தும் இன்னமும் லோகோபகாரஞ் செய்யவேண்டியது உண்டென்று தோற்றியும், அஃதின்னதென்று தெரியாதிருக்கையினாலே சிந்தித்துக்கொண்டிருக்கிறேன். அதைத் தெரிந்து இன்னதென்று சொல்லவேண்டுமென்று வினவியதற்கு நாரதர் சொல்லுகின்றார்.

ஓ வியாசமுனிவரே! நீர் செய்தவைகளெல்லாம் இயல்பாயினும் பிராகிருததர்மங்களையும் பிராகிருதரான ராஜாக்களையுமே மிகவும் விஸ்தாரமாகச்சொன்னீர், மோட்சதருமமு முக்திமுதலியவற்றை யபாரதாரமாயும் மோட்சத்தையே புருஷார்த்தமாகக் கோரியிருக்கிற ஸ்ரீபாகவதர்களுடைய மகிமையையுமரிதமாகச்சொன்னீர், அவைகளைக்கேட்ட ஜனங்களுக்கு விபரீதஞானம் வருகிறதேயல்லாமல் தத்வஞானம் பிறக்கமாட்டாது. ஆகையினாலே இதுவே உம்முடைய மனக்குறைவுக்குக் காரணமென்றுசொல்லி, இனிமேற்செய்ய வேண்டிய தத்துவத்தைச் சொல்லுகிறேனென்று ஸ்ரீமந்நாராயணரிடத்தில் தம்முடைய பிதாவான பிரம்மாவுக்கு உபதேசமாகவந்த ஸ்ரீபாகவதத்தையுந் தாம் பிரம்மாவினிடத்திலிருந்து தெரிந்துகொண்டபடி வியாசருக்குச் சுருக்கமாக உபதேசஞ்செய்தார். அந்தவியாசரும், நாரதர் சத்தியலோகத்துக்குப் போனபிறகு சரஸ்வதி நதிதீரத்தில் ஸ்நானமுதலான நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு நாரதர் உபதேசித்த பிரபந்தத்தை யோகத்தியானத்தினாலே உற்றுநோக்கி விஸ்தாரமாக ஸ்ரீபாகவத புராணத்தைச் செய்யத் தொடங்கினார். தொடங்குங்காலத்தில் இந்தப் பாகவதபுராணத்திற் சொல்லப்படுகிற பிரம்மசொரூபத்தையும், பிரமத்தினுடைய குணங்களையும், முக்தரான சீவாத்மாக்களையும், செகத்தினுடைய சிருஷ்டி முதலானவைகளையும், பிரமஞ்செகத்தில் பிரிவில்லாத காரணமாகியும், பிரிவுண்டான காரணமாகியுமிருக்குமிருப்பையும், சுருக்கமாகக் காண்பித்துப் பிரமலட்சணமாகிய சென்மாதி காரணத்துவத்தைச் செகத்துக்குச் சொல்லுகிற உபநிஷத்தைப் பிரகாசப்பண்ணுகிற பிரமசூத்திரத்தாற் றொடங்கிக் காயத்திரி பதங்களுடனே கலந்த கிரந்தபதங்களால் சேர்த்துப் பிரமத்தினுடைய சுவரூபத்தைத் தெளியவுரைக்கிற சத்தியபதத்தால் முடிவைக்காண்பித்துத் திமஹீயென்கிற காயத்திரிபதத்தால் முடித்தபடியினாலே, பிரமம் செகத்துக்குக் காரணமென்

றும், எல்லாமறிந்ததென்றும், தனக்கு ஒத்தாரு மிக்காருமில்லாம லிருக்கப் பட்டதென்றும், தன்னை முத்தர்களடைகிறகாலத்திலும் அவர்களிற் கலந்திருந்தேதான் வேறாகவிருந்து அவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்குமென்றும்,இப்படிக்கெல்லா முதற்சுலோகத்திலேசொல்லியிருக்கையால் இந்தப்பாகவதம் விரோதமான பொருள்களைச் சொல்லாது. இந்த முதற்சுலோகத்திலே சொல்லியிருக்கிறபொருளென்னவென்றால்? சென்மாதியாகிய இந்தவுலகத்தினுடைய சிருஷ்டியும் பாலனமும் சங்காரமும் எவனுடைய செயலோ, இவைகளைச் சொல்லுகின்ற காரணவாக்கியங்கள் மற்றொருவரிடத்திலே பொருந்தாமல்,எவனிடத்திலே யியல்பாகப்பொருந்தி விளங்குகின்றனவோ,இந்தவுலகங்களுடைய சிருஷ்டிமுதலான காரியங்களைத் தலைக்கூடும்படி சாதகமாகிய அறிவையுடைத்தானவனெவனோ, எவனுக்கு உயர்ந்தவரும் சரியானவரும் மற்றொருவரில்லையோ, எவன் ஆதிகவியான பிரம்மாவுக்கு இந்த வுலகசிருஷ்டிக்குப் பழையமார்க்கமான வேதத்தை அறியும்படி தன்மனதினாலே தானே நினைத்தானோ, எவனை எக்காலமுமிந்த மாய்கைக்குள் வெளிப்பட்ட நித்திய சூரிகளு மிவ்வளவென்று முழுவது மறியமாட்டாம லிருக்கின்றார்களோ, பஞ்சபூதங்களு மாதிகாலத்தில் ஒன்றோடொன்று கலக்கமாட்டாம லிருந்ததை எவன் அவற்றில் புகுந்து சேர்ப்பித்தானோ, பிரிவில்லாத காரணமாகிய எவனிடத்தில் சத்துவமுதலான மூன்றுகுணங்களையுடைய கருமங்கள் உலகத்திற் சத்தியமாக விளங்குகின்றனவோ, இப்படிச் சூட்சும ஸ்தூலமாகிய சேதனசேதனங்களிலே யுட்புகுந்து அவையும் அவற்றின் கருமங்களும் அவற்றின் கருத்தாவுமாகியிருந்தாலும் அவற்றிலுண்டான தோஷங்களைத் தன்னிடத்திலே எப்போதும் சேரவொட்டாம லிருக்கிற மகிமையை உடைத்தானவனெவனோ, அந்தப் பரமசத்தியமூர்த்தியைத் தியானம் பண்ணுகிறேனென்று முதற்சுலோகத்தால் வணங்கினார். இப்படித் தம்மாலே செய்யப்படுகிற பாகவதபுராணத்தை மற்ற இராசத தாமச தருமங்களைச் சொல்லுகிற புராணங்களோடே பொய்யென்றும், அவைகளில் சொல்லப் படுகிற அருத்தங்களிந்தப் புராணத்திற் சொல்லுகிற அருத்தங்களைப்போலே சத்தியமான தருமமென்று நினைக்கவேண்டியதில்லை. ஆகையால் மோக்ஷமாகிறபதத்தைக் கோரினவர்களுக்கு இந்தப் பாகவதமே முக்கியமென்று இரண்டாவது சுலோகத்தால் வெளியிட்டார்.

அதெப்படியென்றால், இந்தப்புராணத்திற் சொல்லுகிற தருமங்கள், மற்றவிடத்திற்சொல்லுகிற தருமங்களைப்போல், சுவர்க்காதிபோகங்களைக் கொடுத்துச் சிலகாலம் அவ்விடத்தில் புருஷனுக்கு ஆசையை உண்டுபண்ணி, அவனை, அவனுமறியாமல் தலைகீழாகத் தள்ளுகிற வஞ்சனைவிட்ட பரமதரும மாகையினாலேயும், இதில் வர்ணிக்கப்படுகிற தேவன் தன்னையறிந்து தன்னை அடுத்தபேருக்குத் தாபத்திரயங்களையுங் கெடுத்து, ஒருகாலத்திலும் ஏற்றக்குறைவும் அழிவுமில்லாமலிருக்கிற ஆனந்தசமுத்திரமாகிய நிரதிசய இன்பத்தைத் தன் பக்தருக்குக்கொடுக்கும் புருஷோத்தமனென்றும் கூறுவதாம். இந்தப் புராண விஷயங்களைச் சொல்லவும், படிக்கவும் யோக்கியரானவரெவரென்றால், பாதே

வதையினுடைய மகிமையைச் சகிக்கமாட்டாமையாகிற அசூயையும் மாச்சரியமும்விட்ட உத்தமபுருஷரென்றும், இந்தப்புராணத்தை உபதேசித்தவர் ஆதிகர்த்தாவான ஸ்ரீமந்நாராயண முனியென்றும், இன்னம் இந்தப்புராணத்தைக் கேட்கவேண்டுமென்று இச்சித்த மகாபுண்யசாலிக்கு இந்தக் கதைகளைக் கேட்கையிற்றானே சர்வசுவதந்திரரான பரமாத்துமா, அவர்களுடைய நெஞ்சிற்புகுந்து அதிசஞ்சலமாகிய அவர்களுடைய மனதைத் தம்மிடத்திற் சேர்த்து இடைவிடாமல் ஒருமைபண்ணுவதுபோல, மற்றப்புராணங்களினுண்டாகாதென்று, சொல்லி மூன்றுஞ்சுலோகத்தால் வேதமாகிற கற்பகவிருட்சத்திற் பழுத்தபழமானது பலித்துப் பிரம்மாவும் நாரதரும் தாமுமாகிற துளிரும் பூவுமாய்த்தழைத்த கிளைகளில்தங்கி மெல்லப் பூமியிலிழிந்து சுகமுனியாகிற கிளிமுகத்தால் கோதுபட்டு, மோக்ஷமாகிற மதுரரசத்தைப் பெருகவிடுகிற தோலும் கொட்டையும் நாருமில்லாத பாகவதமாகிற பழத்தைக்காட்டி ஓ பிரமானுபவம் பண்ணவல்லவர்களே! நீங்கள் இந்த வுலகத்திலேதானே அந்த ஆனந்தத்தை அடிக்கடி அனுபவப்பண்ணுங்கள். இந்த ஆனந்தானுபவம் உங்களுக்கு இவ்விடத்தில்மாத்திரமல்ல, மோக்ஷதிசையிலும் இதுவேபலனாகப் பெறுவீரென்றுசொல்லி, இந்தப்புராணத்தைப் படித்து இதனுடைய அருத்தத்தை அனுபவிக்கும் ஜனங்களினுடைய சுகிர்தத்தைத்தாமே சந்தோஷித்து ஆச்சரியப்பட்டுக்கொண்டார்

இப்படி மூன்றுசுலோகத்தால் பாகவதத்திற் சொல்லுகிற சிறப்பைக் காண்பித்துத் தாஞ்செய்த புராணத்தைத் தம்முடைய வேதபாராயணமாகிற தபோ கர்ப்பத்தில் பிறந்து தமக்குப்புத்திரராகிய சுகமுனிக்கு அருளிச்செய்தார். அவரும் பிறவிமுதல் பிரமநிஷ்டரானாலும், தம்முடையமனதில் பிரத்தியட்சமாக அனுபவித்துவருகிற வாசுதேவனுடைய மகிமையைச் சொல்லுகிற புராண ரத்னமாகையால் இந்தப்புராணத்தைப் படித்து,மனதில்தரித்து,இதைக்கேட்க மற்றொரு யோக்கியரில்லாமையால் தம்முடைய ஆச்சிரமத்திற்குரித்தாகிய மவுனத்தைத்தரித்து, ஓரிடத்திலும் ஒருபசுகறக்கிறநேரமுமிராமல் சகலமும் வாசுதேவசொருபமென்று பிரத்தியட்சமாய்த்தெரிந்துகொண்டு, இந்த வுலகத்தில் சஞ்சரிக்கிறகாலத்தில், பிரமசாபத்தால் தன்காலந்தெரிந்து வயிராக்யம் பிறந்து கங்கையில் பிராயோபவேசம்பண்ணிப் பரகதிக்கு வழிகாண்பிக்கும் பரமபாகவதரைக் காணாமல் தவித்திருந்த பரிக்ஷித்துமகாராஜாவுக்கு உபதேசித்திருக்கிற சமயத்தில், நாரதர்முதலான சகல முனிவர்களும் அந்தக்காலமறிந்து, தங்களிருதயத்திலிருக்கிற கதாதரனை சுவாமியால் சகல தீர்த்தங்களையும் பரிசுத்தம்பண்ணவேண்டித் தீர்த்தயாத்திரை நிமித்தமாய் எழுந்தருளி, இந்த உபதேசங்கேட்டுக் களிப்படைந்தார்கள். இந்தப்புராணத்தை ஸ்ரீவேதவியாச முனிவரிடத்தில்படித்து, வியாசரனுக்கிரகத்தினால் சகலமான இதிகாசபுராணங்களையும், தருமங்களையும், சகலமான பிராணிகளுக்கும் தெளியவுரைத்து, லோகரட்சணம் பண்ணிவருகிற சூதபுராணிகரிடத்தில், சவுனகர்முதலானருஷிகள் தெரிந்துகொண்ட பாகவதத்தைத் தமிழ்வசனமாகக் கூறுகின்றோம்.

முன்னொருகாலத்தில் சகலமானதேவர்களும் முனிவர்களுங்கூடிச் சதுர்முகனை அடுத்து ஓ பிதாமகனே! இந்தக் கருமபூமியில் கலிபுருஷன் எந்தமட்டும் கைக்கொண்டு கலிதருமங்களை விர்த்திபண்ணி வைதீககருமங்களைக்கெடுப்பானென்றுகேட்டதற்கு, அந்தக்கமலாசனன் அவர்களைப்பார்த்துத் தேஜோமயமான ஒரு சக்கரத்தைக் கற்பித்து ஓய் தேவர்களே! முனிவர்களே! இந்தச் சக்கரத்தின்முனை யெவ்விடத்தில் முறிந்துவிழுகிறதோ அதற்கப்பால் கலிதருமமிகுதியாகி வைதிகதருமங்களைக் கெடுக்குமென்றுசொல்லி அந்தச் சக்கரத்தைப் பிரயோகித்தபின்பு, அதன்முனை எந்தவிடத்தில் முறிந்துவிழுந்ததோ அந்த ஆரண்யத்துக்கு நைமிசாரண்யமென்று பெயர் விளங்கிற்று. இதல்லாமல் முன்னொருகால் ஸ்ரீமகாவிஷ்ணு அசுரரை அந்த ஆரண்யத்தில் நிமிஷமாகிய கண்ணிமைப்பாடென்கிற ஆயுதத்தினால் சங்காரம்பண்ணின படியினாலே நைமிசாரண்யமென்று சொல்லப்பட்டது. இந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீமகாவிஷ்ணு நரநாராயண அவதாரம்பண்ணித் தபசுசெய்தபடியினாலே ஸ்ரீமகாவிஷ்ணு க்ஷேத்திரமாயிற்று. இப்படி இரண்டுவகையாக விளங்கினபெயரையுடைத்தான ஸ்ரீவைஷ்ணவக்ஷேத்திரத்தில் சவுனகர்முதலாகிய ருஷிகள் சகலமான புண்ணியலோகங்களிலும் புகழப்பட்டுத் தம் சாட்சாத்காரத்தினால் தம்மை அடுத்த பத்தருக்கு முக்திகொடுக்கிற ஸ்ரீமகாவிஷ்ணுவைக் குறித்து ஆயிரம்வருஷத்தால் முடிக்கிற சத்திரயாக தீக்ஷையைப் பண்ணிக்கொண்டிருந்த அந்தமுனிவர்கள் ஒருநாள் காலையில் தங்களுடைய நித்திய நைமித்தியங்களைத் தீர்த்துக்கொண்டு அக்கினிசுகோஷமும் செய்துகொண்டிருக்கையில் அவ்விடத்தில்வந்த சூதபுராணிகருக்கு உபசாரங்கள் செய்து உயர்ந்த ஆசனமுங்கொடுத்தார்கள். அவரும் அந்தஆசனத்திலிருந்தபின்பு அவரைக்குறித்து மிகவும் ஆதரவுடனே கேட்டார்கள்.

ஓ பரிசுத்த ஆத்மாவே! நீர் வியாசரிடத்திலிருந்து சகலமான புராணங்களையும், இதிகாசங்களையும், தருமசாஸ்திரங்களையும் படித்தீர். இப்படிக்கொத்த உம்மைஅடுத்த புண்ணியசாலிகளுக்குச் சகலதருமங்களையும் தெரியச்சொல்ல அறிவீரல்லவோ? வேதவித்துகளுக்குள் சிரேஷ்டரான வியாசமுனிவரும், சேதனு சேதனங்களிலு நிறைந்த பரமபுருஷனை அறிந்த மற்ற முனிவர்களும் ஜனங்களுக்கு நித்யகல்யாணமாகிய சூட்சுமதருமங்களையும் எவ்வளவு அறிவார்களோ அவ்வளவு தருமங்களையும் அவர்களுடைய அனுக்கிரகத்தினால் நிச்சயமாகத் தெரிந்துகொண்டிருக்கிற சூதரே! நீர் தீர்க்காயுள் பெற்றுப் பெரியோர்களிடத்தில் பக்தியுடன் பணிவிடைசெய்து கேட்டிருந்த தருமங்களை, அந்தப்பெரியோர்கள் மிகவும் இரகசியமாக விருந்தாலும் உமக்குச் சொல்லி யிருப்பார்களல்லவோ? ஆகையினால் அந்தச்சுபமாகிய சூட்சும தருமங்களை, நீர் எங்களுக்குச் சொல்லவேண்டும். ஓ சாதுஜனங்களுக்கெல்லா முதன்மையானவரே! இந்தக் கலியுகத்தில் பிறந்திருக்கிற ஜனங்கள் கொஞ்சமான ஆயுளுண்டாகியும், புண்ணியங்குறைந்தும், பாவமிகுதியாகியு மிருக்கையில் புத்தியீனர்களாகியும், ரோகபீடிதர்களாகியுமிருக்கிற, இவர்களுக்கு ஆகவேண்டிய தருமங்களும், அவைகளுடைய வைலட்சணியங்களும் அள

வில்லை. அவைகளை பலமுறை கேட்டாலல்லாமல் தெரிதல்கூடாது, ஆகையினால் இவற்றில் சாரமான தருமங்களை உம்முடைய புத்தியினால் திரட்டியெடுத்து, ஒருக்கால் கேள்விசெய்த மாத்திரத்தால் பிராணிகளுடைய மனதிலேயிருக்கிற ரஜோகுண தமோகுணங்களைக்கழித்து, விருத்தியான சத்துவ குணத்தை உண்டுபண்ணுகிற தருமங்களை எங்களுக்குச் சொல்லவேண்டும், சூதரே! உமக்கு நித்தியகல்யாணமே யிருக்கின்றது, இஃதேனென்றால் ஷட்குண்ய பரிபூரணனான வாசுதேவன் சாத்துதனென்கிற ராஜரிஷியுடைய குலத்தில் வாசுதேவனுக்குத் தேவகிகருப்பத்தில் ஸ்ரீகிருஷ்ணனென்று, எந்தக்காரியம் செய்யவேண்டிச் ஜெனித்தாரோ அதை நீர் அறிவீரே, ஆகையால் அதைக்கேட்கவேண்டுமென்றிச்சித்திருக்கிற எங்களுக்குச் சொல்லவேண்டும்.

எந்தத் தேவனுடைய அவதாரங்கள் ஜனங்களுக்குத் தீமைகளை விலக்கியிருக்கிற சம்பத்தை நிலைநிறுத்தி, அதிகமான செல்வத்தைக் கொடுக்கும், அதிக பயங்கரமான சமுசாரத்தை அடைந்தவர்களும் அவர்களையறியாமல் அவர்கள் நாவிலே பிறந்த எவனுடைய நாமம் அந்தச சமுசாரத்தை விலக்கும், எல்லாருக்கும் பயத்தை உண்டுபண்ணுகிற மிருத்தியுவானவ னெவனுக்குபயபந்து நடந்துகொள்ளுகிறானோ அவனுடைய பாதசம்பந்தத்தினால் பரமசாந்தி பிறந்த முனிவர்களும் புண்ணிய நதியாகிய கங்காசலமும் தங்களைப் பரிசித்தமாத்திரத்தில் அப்பொழுதே சுத்தம்செய்யக்கூடுமோ, அப்படிப்பட்டவனுடைய இவைகளை இனி விடாமல் அனுசரித்து யாங்கள் கடைத்தேறும்படி சொல்லவேண்டும். பாவநிவர்த்தியாகிற பரிசுத்தத்தைக் கோரினவர்களில் சகலதோஷத்தைப் பரிகரிக்கிற ஷட்குண பரிபூரணரான பரமாத்மாவுடைய லீலைகள் வெகுபுண்ய பலனானதால், அந்தத் தோத்திரத்தைக் கேட்கின்றதற்கு எவனுக்குத்தான் ருசிபிறவாது. அவனுடைய இச்சையினால் அவன் அம்சமான அவதாரங்களைச் செய்கின்ற அவனுடைய நடக்கைகள் இவ்வளவென்றும், இன்னபடியென்றும், அறியக்கூடாதென்று பிரகிருதி நீங்கின ஞானிகள் ஸ்தோத்திரம்பண்ணுகையால் அவைகளைக் கேட்டவர்களுக்குப் பலனுண்டென்கிறதில் சந்தேகமில்லையென்று, நிச்சயித்திருக்கிற எங்களுக்கு நீர் அந்தச சரித்திரங்களைச் சொல்லவேண்டும். பிற்பாடு தானினைத்தபடி முடிக்கிற சுதந்தரனாகிய தனக்குச் சுவாதீனமாகிய பிரகிருதியினால் தன்விளையாட்டை நடத்துகிற ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியான ஸ்ரீஹரி தருமங்களைநிலைநிறுத்துவதாகச்செய்த அவதார கதைகளைச் சொல்லவேண்டும். யாதொருகாரணத்தினால் வேதவித்தகனான ஸ்ரீகிருஷ்ணனுடைய பராக்கிரமங்களைக் கேள்விப்பட்டு அதனுடைய, இரசத்தையறிந்தவர்களுக்கு அடிக்கடி மதுரமாகியிருக்கிறதோ, அது காரணத்தினால் நாங்களும் கேள்வியாகியும் திருப்தியடையவில்லை. ஞானசத்தியாதிகளிலே பரிபூரணனான கேசவன் மனுஷியரூபமாகிற வஞ்சனையால் தன்னைமறைத்து மனுஷராலே செய்யப்படாத காரியங்களைச் செய்து பலராமனுடனே கூடினானல்லவோ? அதனால்நாங்கள் கலிபுருஷன் வந்தானென்று மிகவுந்தெரிந்து இந்த வைஷ்ணவமாகிய க்ஷேத்திரத்தில் வந்து வெகுகாலம் செய்யக்கூடிய சத்திர

யாகத்தைப் பண்ணும்படியான தீக்ஷிதத்து ஸ்ரீஹரியினுடைய கதைக ளைக் கேட்கிறதில் சாக்கிரதையா யிருக்கிறோம். புருஷருடைய சத்துவத்தை அரிக்கிற கலியாகிற கரையில்லாத சமுத்திரத்தைக் கடக்கவேண்டுமென்று நினைத்திருக்கிற எங்களுக்கு நீர் தெய்வ யத்தனத்தினால் மாலுமிபோலக் காண்பிக்கப்பட்டீர். ஆகையால் சர்வதருமங்களுக்கும் ஸ்வாமியாயும் வேதி யர்களுக்குத் தேவனாகியும் தரும கவசனாகியுமிருக்கிற ஸ்ரீகிருஷ்ணன் தன் நிசரூபத்தை யடைந்தபின்பு தருமமானது எவனைச்சரணமடைந்தது என்று வணங்கி வினவினார்கள்.

---

## இரண்டாவது அத்தியாயம்.

சூதர் சவுனகாதி ருஷீச்வரர்களால் பண்ணப்பட்ட ஆறுவினாக்களுக்குள் நாலு வினாக்களுக்கு உத்தரஞ் சொன்னாரென்று சொல்லப்படுகின்றது.

இப்படிச் சவுனகர்முதலான முனிவர்களால் கேட்கப்பட்ட சூதபுரா ணிகர் மிகவுஞ் சந்தோஷத்துடனே அவர்கள் கேட்டவைகளுக்கு விடை சொல்லுகிறார். இந்தப் பாகவதத்தைத் தொடங்குங்காலத்தில் இதனு டைய விளக்கமாகிய மகோபகாரத்தைச் செய்த சுகப்பிரமருஷிக்கு இரண்டு சுலோகத்தால் வந்தனஞ்செய்கிறார். அது எப்படியென்றால் உபநயனமில்லாத காலத்தில் தனக்குச் செய்யவேண்டியதான கருமமொன்று மில்லாமல் துற ந்துசெல்லுகிறவருடைய பிரிவைச் சகிக்கமாட்டாமல் வியாசமுனிவர் புத்திரா வென்று அழைத்தசமயத்தில் தாபரங்களெல்லாம் ஏனென்று பதிலுத்தரங் கொடுத்தனவோ சர்வபூதங்களுடைய இருதயங்களையும் அடைந்த அந்த மகாமுனியை நான் சாஷ்டாங்கமாக வந்தனஞ்செய்கிறேனென்றும், தனக்கு அந்தரியாமியான பரமாத்மாவினுடைய மகிமையை விளங்கச் சொல்லுகிறதா யும், சகலமான வேதாந்தங்களுடைய சாரமாகியும் தனக்கு ஒப்புமற்றொன்று மில்லாமலும் பரமாத்மாவினுடைய ஸ்வரூபத்தைப் பிரகாசம்பண்ணுகிறதா கவு மிருக்கிற இரகசியமான இந்த ஸ்ரீபாகவதத்தைச் சமுசாரத்தில் முழுகி அந்தந்தத் தமசுமுதலான நரகங்களைக் கடக்கநினையாத ஜனங்களிடத்தில் தய வினால் எவர்வெளியிட்டாரோ; அந்தவியாசகுமாரரான சகலமுனிவர்களுக்கும் குருவைச் சரணமாக அடைகிறேனென்றும் வந்தனஞ்செய்து, பின்பு ஸ்ரீமந் நாராயணனுக்கும் நரோத்தமனான நரனுக்கும் சரஸ்வதிதேவிக்கும் வியாச ருக்கும் வணக்கஞ்செய்து சமுசாரத்தை விலக்குகிற ஸ்ரீமகாபாகவதத்தைச் சொல்லுகிறேனென்று, அவர்களைப்பார்த்துச் சொல்லுகிறார். ஓய் முனீந்திரர் களே! எந்த அவதாரத்தினுடைய கதையைக் கேட்டால் பரமாத்துமா கருணை செய்கிறானோ? அந்தக் கிருஷ்ணனுடைய விளையாடல்களைக் கேட்டீர்களாகை யால், இப்போது நீங்கள்கேட்ட வினாக்கள் உலகங்களுக்கெல்லாம் சுபமாகை யால், அந்தக்கேள்வி எல்லாருக்கும் உயர்வானது. சிரேஷ்டமாகிய தருமத் தைச் சொல்லவேண்டுமென்று கேட்டீர்களல்லவோ? அந்தத் தருமமேதெ னில், பரமாத்மாவினுடைய அருளுக்குக் காரணமாகியும் பரிபூரணமாகியும்

பயனைக் கருதாமலுமிருக்கிற யோகக்காட்சியால் அறியத்தக்கவனென்கிற கேசவனாகிய குற்றமற்றவனுடைய பக்தியொன்றுமே பரமதருமமென்று சொல்லப்படும். பரமாத்துமாவினிடத்திற் செய்கிற பக்தி சீக்கிரமாக விஷயத்தில் வயிராக்கியத்தை யுண்டாக்கும். அந்த வயிராக்கியத்தால் பொருள்களில் ஆசை நீங்கும். இப்படி ஒருகாரணத்தையுங் கருதாதபக்தியால் பரமாத்துமாவின் கருணையுண்டாகும். இதைவிட மற்றத்தருமங்களெல்லாம் அங்கமுள்ளனவாகச் செய்யப்பட்டிருந்தாலும் ஸ்ரீ ஹரிகதையில் பிரீதியைப் பிறப்பியாமற்போனால் சரீரவருத்தமாத்திரமல்லாமல் பலன் பெறமாட்டா.

அந்தப்பிரயாசஞ் செய்வதற்குப் பலனற்றனவாகவே யிருக்கும். உபநிஷத்துக்களின் அருத்தங்களுடைய கேள்வியும், ஸ்ரீ ஹரிகதையாகிற அமிர்தத்துக்குச் சரியாகவந்து நிற்கமாட்டாமல் வெகுதூரத்தில் விலகி நிற்கும். அதேனென்றால் ஸ்ரீ ஹரி கதாகேளவி செய்கிறபேருக்கு மனங் கரைந்து நேத்திரத்தில் ஆனந்தபாஷ்பம் பிறந்து சரீரமும் புளகிக்குமாப்போல் கடினமான வேதாந்த சிரவணஞ் செய்தபேருக்கில்லை. ஆகையால் சகலசீவாத்மாக்களுங் கடைத்தேறவேண்டித் தருமத்துக்கு மோக்ஷமும், அர்த்தத்துக்குத் தருமமும், காமமாகிற இச்சைக்குத் தத்துவக் கியானமும், பலனை நிச்சயித்த அநாதியான பகவானுடைய சங்கற்பத்தை யறியாமல், அர்த்தத்தைக்குறித்துத் தருமங்களையும், காமத்தைக்குறித்து அர்த்தங்களையும், இந்திரியசுகங்களைக்குறித்துக் காமத்தையும், நினைந்துக்கொண்டவர்கள் சுவர்க்க நரகமாகிற துக்கத்தையும் பிறவிச்சமுசாரத்தையும் ஒருக்காலத்திலும் தவிரமாட்டார்கள். ஆகையால் சகலகருமங்களையுந் தத்துவக்கியானத்தைக் குறித்தேசெய்யவேண்டும். தத்துவமாவது, கியானசொரூபமாகையினாலும், கியானமே குணமாகவுடைத்தா யிருக்கையினாலும், சேதனாசேதனங்களைச் சரீரமாக வுடைத்தா யிருக்கையினாலும், அந்தச் சிறந்த ரூபத்தாலே பிரம்மனென்றும், பரமாத்துமாவென்றும், பகவானென்றும், சொல்லப்படுகிற வஸ்துவென்றும், அதினுடைய உண்மையை யறிந்தவர்கள் நிச்சயித்துச் சொல்லுகிறார்கள். அப்படியே ஆராய்ந்து விசுவாசித்து நிச்சயித்த முனீச்வரர்கள் கியானவயிராக்கியங்களுடனே தாங்கள் கேள்விப்பட்டபடி செய்கிறபக்தியால் கியானஸ்வரூபனான ஆத்துமா தன்னிடத்தில் கியானஸ்வரூபனாகியும், கியானகுணனாகியும், பரிபூரணனாகியு மிருக்கிற பரமாத்துமாவைத் தன்னுடைய தேகத்துக்குத் தான் ஆத்துமாவானதுபோலத் தனக்கு ஆத்துமாவாகிச் சாக்ஷாத்கரிக்கிறான். ஆகையால், ஓ பிராமணசிரேஷ்டர்களே! வர்ணாச்சிரமதருமங்களால் சாங்கோபாங்கமாக அனுஷ்டித்த தருமவிசேஷங்களை ஸ்ரீ ஹரிக்குப் பிரீதியாகவே செய்யவேண்டும். ஆகையால் மனதை மற்றவிடங்களிற் போகவொட்டாமல் ஷட்குணபரிபூரணனான ஸ்ரீகிருஷ்ணனிடத்தில்நிறுத்தி அவன் ஸ்வபாவங்களையுங் கேட்டுக் கீர்த்தனஞ்செய்து, தியானயுக்தனாகி, ஒரு நிமிஷமாகிலும் இடைவிடாமல் சிந்திக்கவேண்டும். யாதொருகிருஷ்ணனுடைய தியானமாகிற கத்தியைக்கைக்கொண்டக் கியானிகள் கருமமாகிறபந்தத்தைச் சேதிக்கிறார்களோ? அந்தப் பகவானுடைய கதையில் பிரீதியை எவன்தான் செய்யான்? ஸ்ரீ வாசு

தேவனிடத்தில் அன்புபிறக்கவேண்டுமென்றால் அதற்குச் சாதனஞ்சொல்லு கிறோம். புண்ணியதீர்த்தங்களில் வெகுகாலம் ஸ்நாநாதிகள் செய்த புண் ணியத்தால் பரமபாகவதர்களுடைய கூட்டுறவு அடைந்து, அவர் அனுக்கிர கீத்தினால் இந்தக் கதையைக் கேட்க இச்சையுண்டாகும். பின்பு கதாசிர வணஞ்செய்ய, அந்தக் கதையில் சிரத்தைபிறந்து, பகவானிடத்தில் அதிக அன்புண்டாகும். இப்படி யன்புடனே தன்னுடைய கதையைக் கேட்கிற வர்கள் இருதயத்திலிருக்கிற புண்ணிய சிரவணகீர்த்தனனான ஸ்ரீகிருஷ்ணன் சாதுஜன பந்துவாகையால், அந்த இருதயத்திலுண்டான பாவங்களை யுதறி விடுவான். இப்படி இருதயத்திலுண்டான பாவங்கள் நீங்கினபின்பு, இடை விடாமல் பாகவதர்களுடைய சேவைபண்ணுகையில்,உயர்ந்த புகழுடையவனான பரமாத்மாவினிடத்தில் சலியாத பக்திபிறக்கும். அப்போது ரசோகுண தமோ குணங்களிடத்திற்பிறந்த காமக்குரோதாதிமுதலான அறுவகைக் குற்றங் களும் அரிஷ்டவர்க்கங்களும் இந்த மனதைப் பற்றமாட்டாவாகையால், இந்த மனது, தன்னுடைய சஞ்சலத்தைவிட்டுத் தத்துவ சம்பன்னமாகிய ஞானத் தால் சம்சயவிபரீதங்களைத்தவிர்ந்திருக்கும்.பகவானிடத்தில் இப்படித்தீவரமா னபக்திசெய்கையால், பிரசன்னமான மனதையுடைத்தான புண்ணியசாலிக்கு விஷயசங்கந் தவிர்ந்து, பகவானுடைய தத்துவமாகிற சாட்சாத்காரம் பிறக் கும். இப்படிச் சகல சேதனசேதனங்களுக்கும், ஸ்வாமியான பரமாத்மாவைத் தன்னிடத்தில் கண்டமாத்திரத்தால் கருமமாகிற முடிச்சு அவிழ்ந்து சம்சய விபரீதங்களுந் தவிர்ந்து, பூர்வசஞ்சிதமான கருமங்களெல்லாம் அதன் வாச னைகளுடனே தீரும். ஆகையால் ஞானிகள் ஷட்குண பரிபூரணனான வாசு தேவனிடத்தில் பரமசந்தோஷத்தினால் மனதினுடைய பிரசாதத்துக்குக் காரணமான பக்தியை யிடைவிடாமல் செய்வார்கள்.

இந்தப் பக்தியை ஸ்ரீஹரியிடத்தில் செய்தால் மோட்சமாகிற பலனைப் பெறுவார்களென்றும், மற்றொருவரிடத்தில் செய்தால் அப்பலனைப் பெற மாட்டார்களென்றும் மேற்சொல்லுகிறார். அதெப்படியென்றால் பிரகிருதி யென்றும், புருஷனென்றும், பரமபுருஷனென்றும், மூன்றுவகையான தத்து வங்களில், பரமபுருஷன் பிரகிருதியுடைய மூன்றுவகையான ஞானகுணங் களிற் கலந்து மூன்றுவகையான பேரினால் விளங்கினவனாகி, மூன்று சரீரங் களைத்தரித்தான். அவைகளில் சத்துவத்திற் கலந்து விளங்கின பரமபுரு ஷன் ஹரியென்றும், ரசோகுணத்தில் விளங்கின பரமபுருஷன் அயனென் றும், தமோகுணத்திற் கலந்து விளங்கின பரமபுருஷன் அரனென்றும், இப்படி மூன்றுவகையாய் உருவையெடுத்து, அயனாகிற வுருவாலே இந்த வுலகங்களைச் சிருஷ்டித்தும், ஹரியென்னும் ரூபத்தாலே ரக்ஷித்தும், அர னென்னும் உருவத்தாலே சங்கரித்தும், தன்னுடைய லீலைகளை நடப்பிக்கிற பரமபுருஷனுடைய ரூபங்களிலே சத்துவமூர்த்தியான ஸ்ரீஹரியிடத்திலிரு ந்து (சதுர்வித புருஷார்த்தங்களும்) நாலுவகைத்தருமங்களும் ஜனங்களுக்கு லபிக்கும். அதென்னவென்றால் வேதமயமான அக்கினியானவன், அரணி யான கட்டையில் நிறைந்து மறைந்திருக்கிறான். அந்த அரணியை கடை

யுங்காலத்தில் புகைந்துகொண்டிருக்கிறான். இப்படி மூன்றுவகையான உருவையெடுத்த அக்கினிக்கு அந்த அரணியைக்காட்டிலும் புகைகிற கட்டை பெரியது என்றும், அதிலும் ஜொலிக்கிற தணல்பெரியதென்றும், எவ்வாறு உலகத்திலனைவரும் ஒப்பும்படியா யிருக்கிறதோ? அப்படித் தாமத சரீரகனை அரனைக்காட்டிலும் ராசத சரீரகனை அயனும் அவனைக்காட்டிலும் சத்வ சரீரகனை ஹரியொருவனே மேன்மேலும் அதிகமாகையால், சத்வமயமான கியானமே பிரம்மமென்றும் சொல்லப்படும். இப்படிச் சுத்தமாகிய சத்துவத்தில் பிரவேசித்த ஸ்ரீ ஹரியை, இந்திரியங்களால் அறியக்கூடாமலிருந்தாலும், ஷட்குணபரிபூரணனாகவே நிச்சயித்து முனிவர்கள் முன் உபாசித்தார்கள். இப்பாலந்த ரிஷிகளைப்போல மற்றரிஷிகளும் இந்த ஹரியிடத்திலேதானே பக்திபண்ணுகிறார்கள்.

மோட்சத்தை இச்சித்தவர்களெல்லாரும், மனக்குற்றமில்லாதவர்களானாலும் அதிகோரமான தேகத்தையுடைத்தாகிய பிரமாதிகளான பூதபதிகளைக் கழித்து, நாராயணனுடைய அம்சங்களான அவதாரங்களையே யுபாசிப்பார்கள். ராசதமும் - தாமதமும் - கலந்த ரசோதமோ சரீரத்தையெடுத்த பிராணிகள் தங்களுக்குச் சமானமான சீலத்தையுடைத்தாகிய பிதுர்ப்பதியான ஆதித்தியாதிகளையும், பூதபதியான ருத்திராதிகளையும், பிரஜாபதியான பிரம்மாதிகளையும், சம்பத்தைக் குறித்தும், ஆதிபத்தியத்தைக்குறித்தும், சந்தானங்களைக்குறித்தும், உபாசிப்பார்கள். ஆகையால் சகலவேதங்களும் வாசுதேவனிடத்தில் கருத்தையுடைத்தானவைகள். சகல யக்கியங்களும் வாசுதேவனாகிற தேவனிடத்திலேதானே விளங்கும். வர்ணாச்சிரமதருமங்களெல்லாம் வாசுதேவனைத்தானே குறித்துச் செய்யத்தக்கவைகள். கியானமெல்லாம், வாசுதேவனிடத்திலேதானே சம்பாதிக்கத்தக்கவை. சகலமான தபசுகளுக்கும் பலமாகிறவன் வாசுதேவன். சகலதருமங்களும் வாசுதேவப்பிரீதியாகவே செய்யவேண்டும். இவற்றின் பலனைக்கொடுக்கிறவனும் வாசுதேவனே. ஆதிகாலத்திலே ஷட்குண பரிபூரணனை வாசுதேவன் ஒருவனே தனக்குச சுவாதீனமான பிரகிருதியினால் இந்த வுலகங்களைச் சிருஷ்டித்தான். திரிகுணமயமான இந்தப் பிரகிருதியைச் சரீரமாக அபிமானித்திருக்குங்காலத்திலும், இந்தப் பிரகிருதி சூட்சுமமா யிருக்குங்காலத்திலும் தான் காரணமாகவும், இது ஸ்தூலமா யிருக்குங்காலத்தில் தானே காரியமாகவும் இருந்தாலும், இந்தப் பிரகிருதி குணங்கள் தன்னிடத்தில் பொருந்தாமல் விளங்குகிறான். அந்தப் பிரகிருதியினால் செய்யப்பட்ட இந்தக் குணங்களில் தான் புகுந்திருக்கையால் அந்தப் பிரகிருதியினுடைய குணங்களை உடைத்தானவன்போல் விளங்குவான். அக்கினி ஒருவனாகவிருந்தாலும் தனக்கு ஆச்ரயமான மரங்களில் வெவ்வேறாகத் தோன்றுகிறாப்போல் சகலசேதனசேதனங்களிலும் நிறைந்திருக்கிற பரமபுருஷன் வெவ்வேறாகத் தோன்றுவான். ஆகையால் இந்தப் பகவான் திரிகுணமயங்களான தன்மாத்திரைகளும் பூதங்களும் இந்திரியங்களுமாகிய இவற்றால் கற்பிக்கப்பட்ட காரியங்களிலும் தன் சங்கற்பத்தினாலே நிறைந்து அதனுடைய குணங்களை அனுபவிக்கிறான்.

உலகசிருஷ்டிக்கெல்லாம் கர்த்தாவான இவன் சத்வகுணத்தைச் சரீரமாக நினைத்து லீலாவதாரங்களில் திருவுளம்பற்றித் தேவமனுஷியாதி ரூபங்களைத் தரித்து இந்த உலகங்களை ரக்ஷிக்கிறான்.

---

## மூன்றாவது அத்தியாயம்.

*மஹாபுருஷனுடைய அவதார கதையின் வினாக்களுக்கு அந்தந்தச் சரித்திரங்களினால் பகவத் அவதாரங்களைச் சுருக்கமாக எடுத்துச்சொல்லுகையால் சூதராலே உத்தரம் சொல்லப்பட்டது.*

இப்படி ஷட்குண பரிபூரணனான பரமாத்மா, ஆதிகாலத்தில் உலகங்களைச் சிருஷ்டிக்கவேண்டுமென்று இச்சையினால், அகங்காரம் ஒன்றும், பூதங்களைந்தும், சூட்சுமபூதங்களைந்தும், இந்திரியங்களைந்தும், ஆகப் பதினாறு கலைகளுடனே கூடிய மகத்துவமாகிய சரீரத்தைச் சங்கற்பித்துப், புருஷாகாரமாகிய உருவை யெடுத்தான். அந்தரூபம் எப்படிப்பட்டதென்றால், பரிபூரணமான சலத்துக்குள்ளே யோகநித்திரைசெய்கிற காரணத்தாலே, யோகத்தைச் செய்கிற அந்த மூர்த்திவிசிஷ்டமான ஸ்வாமியினுடைய நாபியாகிற மடுவிலுண்டான கமலத்திற்பிறந்த சதுர்முகனானவன், மற்றப் பிரஜாபதிகளுக்கெல்லாம் சிரேஷ்டனாகவிளங்கிப் பரமாத்மாவினுடைய சரீர அவயவங்களாகிற எந்தஸ்தான விசேஷத்தால் பதினான்கு லோகங்களையுடைய விஸ்தாரத்தைக் கற்பித்தானோ? அந்தரூபம் சத்வமதிகமாகி அதிகபலமானது. இந்தரூபத்தைப் பிரம்மாவானவன், அநேகங்கிரீடங்களுடனேயும், சிரசுகளுடனேயும், கண்களுடனேயும், காதுகளுடனேயும், குண்டலங்களுடனேயும், மூக்குகளுடனேயும், புஜங்களுடனேயும், தொடைகளுடனேயும், பாதங்களுடனேயும், பீதாம்பரங்களுடனேயும் கூடிவிளங்கி, ஆச்சரியகரமாகக் கண்டான். ஸ்வாமியினுடைய அவதாரங்களில் இது முதலாவது அவதாரம். இந்த அவதாரத்திலிருந்து மற்ற அவதாரங்களெல்லாம் உண்டாயின. இந்த அவதாரத்தினுடைய பரமாணுவால் தேவதைகளும் மானிட மிருக பக்ஷி செந்துக்களெல்லாம் கற்பிக்கப்பட்டன. இந்த விராட்புருஷன், ஆதிகாலமான கவுமார சருக்கத்தில் தானே பிரமசரியத்தைத் தரித்துத் துஷ்கரமான தபசைச்செய்தான். இப்பால் இரண்டாவது அவதாரத்தில் அந்தப்பகவான் இந்தவுலகங்களுடைய க்ஷேமத்தைக்குறித்துப் பாதாளத்தில் முழுகியிருந்த பூமியை உத்தரிக்கவேண்டி யக்கியஸ்வரூபமான வராகரூபத்தைத் தரித்தார். அப்பால் மூன்றாவது அவதாரத்தில் ரிஷிசருக்கத்தில் நாரதரூபமான அவதாரத்தையெடுத்துப், பலத்தை யிச்சியாத கருமானுஷ்டானமே முக்கியமென்று கருமஞ்செய்தவனை அந்தக் கருமபலன் தொடாதென்பதையும் வெளியிடவேண்டிச் சாத்வசங்கீதையான பாஞ்சராத்திர சாஸ்திரத்தை அருளிச்செய்தார்.

நாலாவது, தருமகலாசருக்கத்தில் நரநாராயணர்களென்கிற ரிஷிரூபங்களைத் தரித்துச் சகல இந்திரிய நிக்கிரகங்களைச் செய்து மற்றொருவராலே செய்யக்கூடாத தபசைச் செய்தார். ஐந்தாவது அவதாரத்தில் கபிலாவதாரத்

தைத் தரித்து, யோகசித்தி சிரேஷ்டனாகி வெகுகாலமாயிருக்கிற சாங்கிய சாஸ்திரத்தைத் தமக்கு மாதாவான தேவகிக்கு உபதேசித்துத் தத்துவசமூகங்களை நிச்சயஞ்செய்தார். ஆறாவது அவதாரத்தில் அனுசூயாதேவியால் பிரார்த்திக்கப்பட்டு அத்திரிமகாரிஷிக்குப் புத்திரனாக ஜனித்துத் தத்தாத்திரேயனென்று பெயரையுடைத்தாகி, அன்றகனுக்கும் பிரகலாதர் முதலானவர்களுக்கும் தத்வ உபதேசஞ்செய்தார். ஏழாவது சருக்கத்தில் ருசிப்பிரஜாபதிக்கு ஆகுறுதி தேவியிடத்தில் அவதாரஞ்செய்து, ஸ்ரீயக்கியமூர்த்தியென்று திருநாமந்தரித்து, சுயாமாதிகளான தேவகணங்களோடேகூடிச் சுவாயம்பு மன்வந்தரத்தை ரட்சித்தார். எட்டாவது சருக்கத்தில் நாப்பிரஜாபதிக்கு மேருதேவியிடத்தில் அவதரித்து, உருக்கிரமனென்கிற திவ்யநாமத்தாலே பிரகாசித்துச் சகலமான ஆச்சிரமங்களும வந்தனஞ்செய்யும்படியான கியானிகளுடைய மார்க்கத்தைப பிரகாசஞ்செய்தார். வாரீர் சவுனகாதிரிஷிகளே! ஒன்பதாவது சருக்கத்தில் முனிவர்களாலே பிரார்த்திக்கப்பட்டுப் பிருது சக்கிரவர்த்தியென்கிற பெயரால் விளங்கி, ஒன்பதாம் அவதாரத்தை யெடுத்துப் பசுவேஷத்தை யெடுத்திருந்த இந்தப பூமியைக்கறந்து, அதிமாத்திரமான கீர்த்தியைப பிரகாசஞ்செய்தார். பத்தாவது அவதாரத்தில் சாக்ஷூஷமன்வந்தரத்திலே முழுதும கடல்பயமான சலத்தில் மச்சியரூபத்தைத் தரித்து ஓடத்தைக் கற்பித்து வைவசவதமனுவைப பாலனஞ்செய்து பூமியை உத்தரித்தார்.

பதினொன்றாவது சருக்கத்தில் தேவதைகளும அசுரர்களும் மந்தரகிரியை மத்தாகநாட்டிப பாற்கடலில் அமுதங்கடைகிற சமயத்தில் பாதாளத்திலமிழ்ந்து அழுந்தின மந்தரத்தைக் கூர்மரூபமெடுத்து முதுகிலே தரித்தார். பன்னிரண்டாவது அவதாரத்தில் தன்வந்திரியாய் அவுஷதங்களாலே ரட்சித்தார். பதின்மூன்றாவது அவதாரத்தில் மோகினி ரூபந்தரித்து அசுரர்களை மோகிப்பித்து தேவர்களுக்கு அமுதபானஞ் செய்வித்தார். பதினாலாவது, நரசிங்கஅவதாரத்தில் அதிபலாட்டியனான இரணியகசிபுவை வச்சிர சமானமான நகங்களினாலே கோரைபிளந்தாபபோல் அவன் மார்பைப் பிளந்தார். பதினைந்தாவது, வாமனாவதாரத்தைச்செய்து மாபலியினுடைய யக்கியபூமியில்வந்து மூன்றடி நிலத்தையாசித்துப பதினான்கு லோகங்களையும் ஈரடியாயளந்து மற்றோரடியால் அவனையுங் கைக்கொண்டு, தேவர்களுக்குச் சகாயஞ்செய்தார். பதினாறாவது பரசுராம அவதாரத்தில் பிராமண துரோகிகளான ராஜாக்களைப்பார்த்துக் கோபஞ்செய்து இருபதொருதரம் க்ஷத்திரியர்களைச் சங்கரித்து பூமியில் அவர்களைக் கருவறுத்தார்.

பதினேழாவது, சத்தியவதியிடத்தில் பராசரமுனீச்வரருக்கு ஜனித்துத் தம்முடைய நடக்கையால் வியாசரென்று திருநாமந்தரித்து, வேதமாகிற மகாவிருக்ஷத்தினுடைய சாகைகளைக்கண்டு, அவற்றின் சிக்கைப் பற்றறப் பரிகரித்தார். பதினெட்டாவது அவதாரத்தில் தசரதமகாராசாவுக்கு ஸ்ரீராம நாமத்தாலே புத்திரனாக ஜனித்துத் தேவதைகளுடைய காரியசித்தி நிமித்தமாகச் சமுத்திர நிக்கிரகஞ்செய்து, சேதுபந்தனம்பண்ணி, வெகு பராக்கிர

மங்களைக் காண்பித்தார். பத்தொன்பதாவது அவதாரத்தில், விருஷ்ணி வம்சத்திலே ஜனித்து, ராமகிருஷ்ணர்களென்கிற திருநாமங்களைத்தரித்து, பூமி பாரத்தைத் தீர்த்தார். இருபதாவது அவதாரத்தில் கலிவந்தபின்பு தேவத்துரோகிகளான அசுரப்பிரகிருதிகளுக்கு மோகஞ்செய்விக்கவேண்டிக், கீகட தேசத்தில் சினனுக்குப் புத்தனென்னும் புத்திரனாக ஜனித்து, வேதவிருத்த மார்க்கங்களை வெளியிட்டார். இப்பால் சகலலோக ஸ்வாமியான இவர் யுக சந்தியிலே ராஜவர்க்கங்கள், சுவதருமங்களைவிட்டுத் திருடரைப்போல் ஜனங்களை அடித்துப் பறிக்குங்காலத்தில் விஷ்ணுயெச்சென்கிற பிராமணனுக்குக் கற்கியென்னுந் திருநாமந்தரித்துப் புத்திரனாக ஜனிக்கப்போகிறார்.

ஓ பிராமணசிரேஷ்டர்களே! பெரிதான நதியாதிகளிலேயிருந்து உபகாரார்த்தமாகப் பிறந்த கால்வாய்களைப்போல, உலகவுபகாரமாகச் சத்வசம்பூரணனான ஸ்ரீஹரியினுடைய அவதாரங்களை யெண்ணில்முடியா. அந்த அவதாரங்கள் எவைகளென்றால் ரிஷிகளும், மனுக்களும், தேவதைகளும், மற்றுமுள்ள மிகவுந் தேஜஸையுடைத்தான மனுகுமாரர்களும், பிரஜாபதிகளும். இவர்களெல்லாம் பகவத் அம்சங்களல்லாமல் வேறல்ல; எந்தக் காலங்களில் இந்திர சத்துருக்களான அசுரர்களும், ராக்ஷதர்களும், மற்றுமுள்ள துஷ்டர்களும் லோகங்களைப் பீடிப்பார்களோ அக்காலத்தில் இந்தவுலகங்களுக்குச் சுகங்களை உண்டுபண்ணவேண்டி, அவர்களிடத்தில் பகவதம்சம் அனுப்பிரவேசமா யிருக்கும். ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியோ வென்றால்? பரிபூரணனான பரமாத்மஸ்வரூபர். இந்த ஷட்குண பரிபூரணனான பரமபுருஷனுடைய அவதார ரகசியத்தை யாதொருமனுஷன் உபய சந்தியாகாலங்களிலேயும் பரிசுத்தனாகிப் பக்தியுடனே ஸ்தோத்திரம் பண்ணுகிறானோ அவன் சமஸ்தமான துக்கசமுசாரத்தையும் நீங்குவான். கருமாதீனமான சரீரங்களில்லாமல் ஞானஸ்வரூபனான பரமாத்மாவுக்கு முன்சொன்ன ஸ்வரூபங்கள் பிரகிருதிகுணங்களால் கற்பிதமான மகதத்வாதிகளினாலே தன்னிடத்தில் தன் இச்சையினால் உண்டாக்கிக்கொண்ட ரூபங்கள். சுத்தமான ஆகாசத்திலே மேகங்கள் ஒட்டாமலிருந்தாற்போலவும், வாயுவிலே பூபராகம் ஒட்டாம லிருக்கிறதுபோலவும், கியானசிரியனான பரமாத்மாவிலே ஒட்டாமல் சம்பந்தித்திருக்கிற இந்த ரூபங்களை, புத்தியீனர்கள் சேதனங்களுக்குக் கருமத்தினாலே வந்த சரீரம்போல் கருமாதீனமான சரீரமென்று நினைப்பார்கள். இந்த விராட்புருஷ ரூபத்தைக் காட்டிலும் உத்கிருஷ்டமாகியும் வேறாகியுமிருக்கிற ரூபம் ஒன்றுண்டு. அதன் ஸ்வரூபம் என்னவென்றால், ஏற்றக்குறைவில்லாததான சத்வாதிகுணங்களாலே விருத்தியடையாமலும் ஒருவராலேயுங் காணப்படாமலும் கேட்கப்படாமலு மிருக்கிற ஸ்வரூபத்தையுடைத்தா யிருக்கையால், வெளிப்படாமல் இருப்பது என்று சொல்லப்படும். அந்த ரூபத்தைத் தரித்த பரமாத்மாவினிடத்தில் பிரமப்பிரளயகாலத்திலே சகல ஜீவசமூகங்களும் சூட்சுமமென்று சொல்லப்படுகிற அச்சரீரங்களுடனேகூடி மறைந்திருந்து. பின்பு மற்றொரு பிரம்மகற்பத்திலே வேறாக வருகையால் சகல ஜீவர்களும் பிறப்பார்களென்று சொல்

வார்கள். இந்த வஸ்துவினிடத்தில் பிரகிருதி கற்பிதமான இந்த இரண்டு ரூபங்களும் கர்மாதீனமாக வந்தனவல்ல. அவனிச்சையால் ஒப்பவந்தவை யென்று தன்னுடைய புத்தியினாலே நிச்சயமாகத் தெரிந்துகொள்ளுகிற ஞானமே பிரம்மஞ்ஞானமென்று சொல்லப்படும். இந்த ஞானம், மோக சனகமான இந்த மாயை தவிர்ந்தாலே யல்லாமல் சம்சய திரிபுகளைத் தவிரமாட்டாது. அப்படித் தெளிந்த ஞானமுடையவனே சம்பூரணனென்று சொல்லுவார்கள். அந்தப்புருஷன் ஜீவனுக்கு முக்தி திசையில் காணும் படியான குணாஷ்டகங்களை உடைத்தான தன்னிடத்திலே நிறைந்த ஆத்மா வான ஷட்குணபரிபூரணனை அனுபவித்துச் சிலாக்கியனாவன். கருமாதீன மான செயலுங், கருமாதீனமான ஜன்மமுந் தவிர்ந்த எல்லாவுயிர்களிலும் நிறைந்தவனாகிய பரமாத்மாவினுடைய அவதாரங்களும், லீலைகளும், அவனிச் சையினாலே யுண்டானவேயல்லாமல் கருமத்தினாலே வந்தனவல்லவென்று, வேதங்களிலே இரகசியமாக விருந்ததைத் தத்வஞ்ஞானிகள் சொல்லுகிறார் கள். இப்படி ஞானஸ்வரூபனும் ஞானகுணகனுமாகித் தன்னிச்சையி னாலே சேதனாசேதனங்களைச் சரீரமாகத் தனக்குச் சங்கற்பித்து, அவ்வியக்த சரீரகனும் மகத்துவசரீரகனுமாகிய பரமபுருஷன், தான் நினைத்தபடி முடிக்கும் வல்லமையை உடைத்தானவனாகையால்; இந்தவுலகங்களைச் சிருஷ் டித்தும், பாலனஞ்செய்தும், சிலந்திப்பூச்சிபோலத் தானே விழுங்குகிறான். இந்த வுலகங்களை இரக்ஷிக்குங்காலத்திலும், சகலபூதங்களிலும், தான் உட்கல ந்து, அவற்றின் குணங்கள் தன்னையண்டாமல் தானே சுதந்தரனாக இருந்து, ஜீவராசிகள் அஷ்டவர்க்கங்களை அனுபவிக்குங் காலத்திலும், அதன் கந்தத் தைத் தான் ஆக்கிராணஞ் செய்கிறதேயல்லாமல் போசிக்கவில்லை. இப்படி ஷட்குண பரிபூரணனான பரமாத்மாவினுடைய மகிமைகளைப் பிறந்திருக்கிற ஜீவாத்துமாக்களெல்லாம் கருமத்தினால் குறைந்தும், வேறுபாடாயிருக்கிற ஞானத்தை உடைத்தானவராகையால் தெளிவாக அறியமாட்டார்கள். வேஷ தாரியானவன் பலவேஷந்தரித்தாற்போலவே, தானும் தன் சங்கற்பத்தால் வெகுவித ரூபங்களையும் நாமங்களையுந் தரித்திருக்கிற இவனை நிசமாக அறிந் தேனென்றும், ஸ்துதி செய்தேனென்றும், நினைத்தவன் அறிந்தவனல்ல. யாதொருபுருஷன் கபடமில்லாமலும் இடைவிடாமலிருக்கிற நினைவினாலே அளவிடப்படாத மகிமையை உடைத்தாகியும், இந்த வுலகங்களுடைய சிரு ஷ்டி முதலானதுகளையுஞ்செய்கிற சக்கிரபாணியின் பாதபத்மகந்தத்தை அனு பவிக்கிறானோ அவனே அவனுடைய மகிமையையறிவான். ஓ தன்னியரான சவுனகாதிரிஷிகளே! மஹானுபாவர்களான நீங்கள் சகலலோகநாதனை இந்த வாசுதேவனிடத்தில் சர்வசரீரகனாக நினைத்து எப்படி ஆத்மபாவத்தை நினைக்கிறீர்களோ, அதனால் இந்தவுக்கிரமான சமுசார சக்கிரம் எந்த வஸ்து வினிடத்திலில்லையோ அந்தவஸ்துவைச் சேருவீர்கள், சந்தேகமில்லை. வியாச பகவான் வேதசமானமான இந்தப் பாகவதபுராணத்தை உத்தமமாகிய கீர்த் தியையுடைத்தான ஸ்ரீ ஹரியினுடைய லீலாவர்ணனமாகவே செய்தார். சகல லோகங்களுடைய சிறப்பைக்குறித்துச் செய்யப்படும் க்ஷேமங்களுக்கு இருப்

பிடமாகியிருக்கிற மகத்தான இந்தப் புண்ணியசரித்திரத்தைச் சாந்திநிதியான தன்புத்திரனுக்கு உபதேசித்தார். அவரும் சகலவேதங்களிலும் இதிகாசங்களிலும் எடுக்கப்பட்ட சாரமாகிய இந்தப்புராணத்தை உத்தமனாகிய பரிக்ஷித்துமகாராஜாவுக்குச் சொன்னார். கங்கையில் பிராயோபவேசஞ் செய்திருந்த பரிக்ஷித்துமகாராஜாவுக்குச் சுகமுனி இந்தப் பாகவத வுபதேசஞ்செய்யுங்காலத்தில், பிரமரிஷிகள் அனைவருங் கேள்விப்பட்டிருந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் தருமங்களுடனேயும் கியானங்களுடனேயும் கூடவே பரமபதஞ் சேர்ந்தபின்பு, இந்தக் கலியுகத்தில் தருமக்கியானங்களாகிற கண்கள் இழந்த பிராணிகளுக்கு உண்மையான பொருளை விளக்கவேண்டி இந்தப் புராணமானது ஆதித்யவுதயம்போலே உண்டாயிற்று. வாரீர் பிராமணர்களே! அந்தக்கங்கையிலே பரிக்ஷித்துமகாராஜாவுக்கு உபதேசம்பண்ணுகிற பிரம்மதேஜோநிதியான சுகமுனிவர், என்னை யனுக்கிரகித்து அருகே வைத்துக்கொண்டு உபதேசித்தார். அவரிடத்தில் நானும் அதிகரித்தேன். அப்படி அதிகரித்த நான் தெரிந்துகொண்டபடி என்புத்தி அனுசாரம் உங்களுக்கு அறியப்பண்ணுகிறேன் அன்புடன் கேளுங்கள்.

---

## நான்காவது அத்தியாயம்.

*இதில் பகவானருளிய சாஸ்திரத்தினுடைய ஆரம்பத்துக்குக் காரணமாவதையும், தபசினாலேயும், இதிகாசபுராண யுக்திகளினாலேயும், வியாசருக்குச் சந்தோஷமில்லாமையையும் வர்ணிக்கப்படுகின்றது.*

தபோநிதியான சூதபுராணிகரைப் பார்த்துத் தீர்க்க சத்திரயாகத்தில் தீக்ஷிதர்களான முனீசவரர்களில் பெரியவராகியிருக்கிற இருக்குவேத பாரங்கதரான சவுனகரென்கிற குலபதி மிகவுந்துதிசெய்து ஒருவார்த்தை சொல்லுகிறார். ஓ மஹானுபாவராகிய சூதரே! தத்வங்களை யுரைக்கிறவர்களுக்குள்ளே சிரேஷ்டரே! புண்ணியமான இந்தப் பாகவத கதையை மகானுபாவரான சுகமுனீச்வரர் எப்படிச் சொன்னாரோ அப்படியே நீரும் எங்களுக்குச் சொல்லவேண்டும். எந்த யுகத்திலே யிந்த பாகவதம் பூலோகத்திலே வந்தது? எந்தக்காரணத்தினாலே எந்த ஸ்தானத்திலே எவராலே ஆக்கியாபிக்கப்பட்டு வியாசமுனீச்வரர் இந்தச் சத்கிரியையைச் செய்தார்? அவருக்குக் குமாரரான சுகமுனீச்வரர் யோகீச்வரர்களுக்கெல்லாம் சிரேஷ்டராகிச் சகலவஸ்துக்களிலும் நிறைந்த பரமாத்ம ஸ்வரூபத்தை யேகரூபமாக நினைத்துத் தம்மிடத்தில் பிரகாசிக்கிற பரமாத்மாவினிடத்தில் வைத்த மனதைச் சலிக்கவொட்டாமல் நிறுத்தி, பிறருக்குத்தெரியாமல் மூடவேஷத்தால், நின்றவிடத்திலே நில்லாமல் சஞ்சரிக்கிறவர், நகரவாசிகளான ஜனங்களாலே எப்படிக்காணப்பட்டார்? குருசாங்கல தேசங்களிலே ஏன் வந்தார்? உன்மத்தனைப்போலவும் ஊமையைப்போலவும் சஞ்சரிக்கிறவர் அஸ்தினபுரத்திலேன்வந்தார்? ஒரு கால விசேஷத்தில் சுகமுனிவரைப் பின்தொடர்ந்து ரிஷியோக்யமான வஸ்திரந் தரித்துவருகிற வியாசரைக்கண்டு வஸ்திரங்களில்லாமல் ஜலக்ரீடை செய்து

கொண்டிருந்த தேவகன்னியர்கள் சீக்கிரமாக வெட்கத்தால் வஸ்திரந்தரித்த ஆச்சரியத்தைக்கண்டு அந்தத் தேவஸ்திரீகளை வியாசமுனீச்வரர் பார்த்து, ஓ கன்னிகையர்களே! என்மகன் யௌவனமுள்ள புருஷன், அவன் வஸ்திரமில்லாமல் வருகையில் நீங்களும் வஸ்திரமில்லாமல் கேளிவிலாசமாக விருந்தீர்களே, வஸ்திரந்தரித்தும் விர்த்தனுமாகிய என்னைக்கண்டு ஏன் வஸ்திரந்தரித்தீர்களென்று கேட்க, அந்தக் கன்னிகைகள் வியாசரே உமக்கு ஸ்திரீயென்றும் புருஷரென்றும் இரண்டு விபாகமுண்டு. உம்முடைய மகனுக்குப் பரிபூரணமான பிரம்மஸ்வரூப விவேகமொன்றேயல்லாமல் வேறில்லையென்று சொன்னார்களல்லவோ? அப்படிபட்ட பரம முனீந்திரருடனே பாண்டுகுலத்தில் பிறந்த பரிக்ஷித்தென்று பெயரையுடைத்தான ராஜரிஷி அந்த முனீந்திரரைக் கேட்கவும், அவருக்கு அந்த முனீந்திரர் தெளியவுரைக்கவுமான சம்வாதம் எப்படி உண்டாயிற்று? அந்தச் சம்வாதத்திலல்லவோ இந்தச் சாத்வஜனன ஸ்ரீ கிருஷ்ணனுடைய கதைகள் நடந்தன; அந்தச் சுகமுனீந்திரர், கிருகஸ்தாச்சிரமத்திலிருக்கிற ஜனங்கள் அந்த ஆச்சிரமத்தைப் பரிசுத்தஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தால், அவர்களிடத்தில் தயவினாலே ஒருபசு பால் கறக்குங்காலம் அவ்விடத்திலிருந்து அவர்களாலே வந்தனஞ்செய்யப்படுவார். அப்படிப்பட்ட சுகமுனிவர் வெகுகாலம் அவ்விடத்தில் எப்படியிருந்தார்?

ஓ சூதரே! அபிமன்யு குமாரனை பரிக்ஷித்து மகாராஜாவைப் பாகவதோத்தமனென்று சொல்லியிருக்கிறார்கள். அவனுடைய ஜனனமும், கருமங்களும், ஆச்சரியமானவை. அவைகளையும் எங்களுக்கு நீர் சொல்லவேண்டும். அந்தப் பரிக்ஷித்துச சக்கிரவர்த்தி பாண்டுகுமாரர்களுடைய பெருமையை விருத்திசெய்து, இந்தப் பூமண்டலமெல்லாம் நிறைத்தவன். அவன் எந்தக்காரணத்தினால் ராஜசம்பத்தை வெண்ணாமல் கங்கையிலே பிராயோபவேசஞ் செய்தான்? சகலசத்துருவர்க்கங்களும் தங்களுடைய க்ஷேமத்தைக் கோரி தங்கள்சம்பத்துகளைச் சமர்பபித்து எவன் பாதபீடத்தைவணங்கினார்களோ அந்தத்தீரன், தான் யௌவனனாயும், தனக்கு அதிக சிலாக்யமான சம்பத்தையடைந்தும், பிராணனை விடவேண்டுமென்று எப்படிநினைத்தான்? இது ஆச்சரியமாயிருக்கின்றது. வேதார்ச்சிதனான பரமாத்மாவினிடத்திலே பற்றின சித்தவிருத்தியுண்டான சாதுஜனங்கள் சகல சீவர்களும் அசுபங்களை நீக்கிச் சுபங்களைக் கற்பித்துப் பின்னும் அவர்கள உத்தமகதி யடையும்படி இதத்தைச் செய்யவேண்டிக், தாங்கள் சீவிக்கிறதேயல்லாமல் தங்கள் பிரயோசனத்தைக் கோருகிறதில்லை. ஆகையால் காமக் குரோதாதிகளுக்கு வசமாகாமலிருக்கிற தன் சரீரத்தை வெறுத்துப் பரிக்ஷித்து மகாராஜா ஏன் சரீரத்தை விடநினைத்தான்? வேதார்த்தத்தை வெளியிட்ட ஸ்வரூபமில்லாத புராணங்களும், தருமசாஸ்திரங்களும், இதிகாசங்களுமாகிற வாக்குகளுக்கு விஷயமான தருமதத்வங்களிலே தேவரீர் சிரேஷ்டராகையால் நாங்கள் கேட்ட இந்தச் சூக்ஷ்மமான அர்த்தங்களை எங்களுக்குச் சம்பூரணமாகச் சொல்லவேண்டுமென்று சொன்ன சவுனகாதிரிஷிகளைப் பார்த்துச் சூதபுராணிகர் சொல்லுகிறார்.

கேளுங்கள் சவுனகாதிரிஷிகளே! மூன்றும்யுகமாகிய துவாபரயுகத்திலே ஸ்ரீபராசரமுனீந்திரருக்கு வாசவிதேவியிடத்திலே ஸ்ரீ ஹரியினுடைய அம்சமாகிய ஸ்ரீவியாசமுனீந்திரர் ஒருகாலத்திலே சரஸ்வதி நதியில் ஸ்நானஞ்செய்து சரியைமுதலானவற்றை முடித்துக்கொண்டு பரிசுத்தராகி, ஜனமில்லாதவிடத்தில் தாம் ஒருவராயிருந்துகொண்டு, சூரியவுதயமானபின்பு தருமாதருமங்கள் அறிந்தவராகையால், அறியக்கூடாமலிருக்கிற சூரியவேகத்தையுடைத்தான காலத்தினாலே உண்டாகிய யுகதருமங்களுடைய சங்கற்பத்தை அந்தந்த யுகத்தில்கண்டு, அந்தந்த யுகதருமங்களுடைய யுகப்பிரமாணத்திலே பூமியில் பிறந்த சேதனுசேதனங்களுடைய சாமர்த்தியக் குறைவுபாட்டையும், அந்தச் ஜனங்களுக்குச் சிரத்தையில்லாமையும் ஈனபலமாயிருக்கையும், துற்புத்திகளேயும், அல்பாயுள்களேயும், அவர்களுக்குண்டான ரோகபீடைகளேயும், திவ்ய கியானத்தினலே கண்டு, சகல வர்ணங்களுக்கும் சமஸ்த வாச்சிரமங்களுக்கும், இதமானதெதுவென்று, தியானம்பண்ணி வேதத்தினலே விதிக்கப்பட்ட யக்கியகருமம் நாலுவகையினலே செய்யப்பட்டிருந்தாலும் பிரஜைகளுக்குப் பரிசுத்தமாகவே யிருக்குமென்று நினேத்து, அப்படியே சங்கற்பித்து யக்கியம் விருத்தியடையவேண்டி, ஒன்முகக் கலந்திருந்த வேதத்தை ருக்குவேதமென்றும், யசுர்வேதமென்றும், சாமவேதமென்றும், அதர்வணவேதமென்றும், நாலாகப் பிரித்து அவற்றுடனே இதிகாச புராணங்களே ஐந்தாம்வேதமாகக் கற்பித்துப பயிலவனென்கிற ரிஷிக்கு ருக்குவேதத்தை உபதேசித்துக், கியானியான ஜயமுனிக்குச் சாமவேதத்தைச்சொல்லி, வைசம்பாயனரென்கிற முனிசிரேஷ்டருக்கு யசுர் வேதத்தைத் தெளியவுரைத்து, குரூரரான சுமந்துவென்கிறமுனிக்கு அதர்வணவேதத்தை அப்பியாசம் பண்ணிவைத்து, இதிகாசபுராணங்களே என்னுடைய பிதாவான ரோமஹர்ஷணருக்கு அனுக்கிரகித்தார்.

இப்படிச் சிஷ்யர்களான பயிலவாதிமுனிவர்கள் தங்களுக்கு உபதேசித்த வேதங்களே அநேகவிதங்களாகப் பிரித்து, தாங்கள் தங்கள் சிஷ்யர்களுக்கும், அவர்கள் தங்களுடைய சிஷ்யருக்கும், இபபடிப் பரம்பரையாக உபதேசஞ் செய்வித்ததினலே அந்த வேதங்கள் சாகைகளாகப் பிரிந்தன. ஆகையாலே அந்த வேதங்கள் சிற்றறிவான மனுஷ்யர்களாலேயும் தரிக்கும்படி யோக்கியமாக வியாசபகவான் தீனவற்சலராகையாலே அனுக்கிரகித்தார். இப்பால் ஸ்திரீகளுக்கும், சூத்திரர்களுக்கும், பிரமபந்துக்களுக்கும், காதினலேயுங் கேட்கக்கூடாத வேதவிகிதகருமங்கள் தம்முடைய சிரேயஸை அறியமாட்டாமலிருக்கிற பிராணிகளுக்குச் சிரேயசுக்களே உண்டுபண்ணவேணுமென்று நினேத்துக் கிருபையினலே அந்த வியாசர் இதிகாசமான பாரதத்தைச் செய்தார். இப்படிச் சர்வபிரகாரத்தினலேயும் அந்தப் பிராணிகளுடைய இதத்தைச் சிந்தித்திருக்கிற வியாசருக்குச் சர்வாத்மகனுன பரமாத்துமாவைத் தன் இருதயத்தில் சார்வதா நினேத்திருந்தும் மனதிலே சந்தோஷமில்லாமற்போயிற்று. இப்படி மிகுந்த சந்தோஷமில்லாத இருதயத்தை யுடைத்தான வியாசயோகி, பரிசுத்தமான சரஸ்வதி நதிதீரத்தில் ஏகாந்தமாக இருந்துகொண்டு

ஆலோசனைபண்ணித் தருமங்களை அறிந்தவராகையாலே தனக்குள்ளே தான் சிந்திக்கின்றார். உபநயனமுதல் விரதயுக்தனாகி வேதங்களை அத்தியயனஞ் செய்தேன். குருக்களுக்கும், அக்கினிகளுக்கும், சந்தோஷம் செய்துவைத் தேன். சாஸ்திரம் விதித்ததருமங்களை வழுவுதலில்லாமலும் கபடமில்லாமலும் நடத்தினேன். பாரதமென்னும் நிமித்தத்தாலே வேதார்த்தங்களை வெளியிட்டேன். ஸ்திரீ சூத்திரர்களுக்குத் தெரியும்படி தருமங்களை வெளியிட்டேன். இப்படியெல்லாஞ் செய்திருந்தும், இந்தத்தேகத்தில் வசிக்கிற ஆத்மாவுக்கு, என்னுடைய ஆத்மாவிலே நிறைந்திருக்கிற அந்தராத்மாவினாலே வருகிற ஆனந்தானுபவமும், மனதினாலேவருகிற சந்தோஷமும், அதிருஷ்டனுக்குண்டான பிரம்மதேஜசுபோல பரிபூரணமாகாமைக்கு நிமித்தந்தெரியவில்லை. இதனால் பகவானுக்குப் பிரீதிகரங்களான பாகவத தருமங்களை மிகுதியாகச் சொல்லாமலிருந்தேன். அந்தத் தருமங்களல்லவோ பரமஹம்சர்களுக்கும், பரமாத்துமாவுக்கும், அதிபிரியமானதென்று, சகலபிராணிகளுடைய சுகத்தைக்குறித்து வியசனத்தைஅடைந்து சிந்தித்திருக்கிற வியாசமுனிவருடைய ஆச்சிரமத்திலே நாரதமுனீச்வரர் எழுந்தருளினார். தேவபூசிதரான அவரை வியாசபகவான் எதிர்கொண்டு சீக்கிரமாக அர்க்கியபாத்தியாசனங்களாலே பூசித்துக் களிப்பாக விருவினார்.

---

## ஐந்தாவது அத்தியாயம்.

---

சர்வ தருமங்களைப் பார்க்கிலும் ஹரிகீர்த்தனத்திலுடைய கௌரவம்
வியாசருடைய சித்தப்பிரசாதத்தின்பொருட்டு
நாரதராலே உபதேசிக்கப்படுகின்றது.

மிக்க கீர்த்திசாலியான நாரதமுனீச்வரரும் தமக்கு உபசாரங்கள் பண்ணின வியாசமுனீசவரர் சுகாசனமாக தம்முடைய சமீபத்திலிருந்த பின்பு, அவரைப்பார்த்துத் தமமுடைய கையிலிருக்கிற வீணையினாலே கானஞ்செய்து கொண்டு புன்சிரிப்புடனே கூடினவர்போல ஒருவார்த்தை சொல்லுகிறார். வாரீர் பராசரர்குமாரரே! மஹானுபாவரே! உம்முடைய சரீரத்தில் பிரகாசிக்கிற சீவாத்மாவினிடத்தில் இருக்கிற அந்தரியாமியான பரமாத்துமாவினுடைய அனுபவத்தினாலே அவனுக்குச் சரீரமாகிய சீவாத்பாவுக்கு ஆனந்தமுண்டாயிருக்கிறதா? மனதினாலே கற்பிதமான சகலவிந்திரிய விசிஷ்டமாகிய தேகத்துக்குச் சகல தருமவிரத அனுஷ்டானங்களாலே சந்தோஷமிருக்கிறதா? ஆச்சரியமாகியும், மகத்தாயுமிருக்கிற வஸ்துவை அறிய வேண்டுமென்று நினைத்திருந்தீரே, அதையறிந்தீரா? தருமார்த்த காமமோக்ஷங்களுக்குச் சாதகமாகிய தருமங்களினாலே மிகுதியாகிய பாரதமென்னும் இதிகாசத்தைச் செய்யவேண்டுமென்று நினைத்திருந்தீரே, அதைச்செய்தீரா? ஆதிமத்தியாந்த ரகிதமான பரப்பிரம்மத்தை அறியவேண்டுமென்று நினைத்திருந்தபடி நிச்சயமாகத் தெரிந்துகொண்டீரா? இப்படியிருந்தாலும் ஒரு

பிரயோஜனத்தைக் குறித்து வெகுபிரயாசஞ் செய்தவன் அந்தப் பலனை யிழந்தால் எப்படியோ, அப்படி உம்மைக்குறித்து நீரே சுகப்படுகிறீரே யென்று சொன்ன நாரதமுனீந்திரரைப் பார்த்து வியாசமுனிவர் சொல்லுகிறார். என்னிடத்தில் நீர் சொன்ன நடத்தை யுள்ளதுதான் சத்தியமாகவே சொன்னீர். இப்படியெல்லாம் உபகாரஞ் செய்திருந்தேன் ஆனாலும் என்னுடைய ஆத்துமா சந்தோஷம் அடையவில்லை. அதன் காரணத்தையும் அறியவில்லை. ஆகையால் பிரம்மதேவனுடைய சரீரத்தில் ஜனித்து அளவிடப்படாத க்கியானநிதியான தேவரீரைக்கேட்கிறேன். இப்படி ஜனித்தவர்களில் ஆதிபுருஷனாகியும், உயர்ச்சி தாழ்ச்சி இல்லாதவனாகியும், சகலவஸ்துக்களுக்கும் ஸ்வாமியாகியும் பிரகிருதியைச் சரீரமாகக் கிரகித்தும் மனதிலேதானே இந்த வுலகங்களைக் கற்பித்தும், ரக்ஷித்தும், சங்கரித்தும், அந்தப் பிரகிருதியினுடைய கூட்டம் தவிர்ந்திருக்கிற சதுர்முகனுடைய சமீபத்தில் வசித்து அவருடைய தயவினாலே பரமசூட்சுமமான சகலதருமங்களையுந் தெரிந்த தேவரீர், சூரியனைப்போல மூன்றுலோகமும் சஞ்சரித்துச் சீவாத்ம சாட்சியான பிராணவாயுவைப்போல யோகவெள்ளத்தினாலே சகல சீவாத்மாக்களுடைய மனதிலுஞ் சஞ்சரிக்கிற சக்தியை யுடைத்தானவராகையால் கேட்கிறேன். பலத்தை இச்சியாமலுரியதருமங்களாலே, அணுவுக்கும் அணுவாய், மகத்துக்கு மகத்தாகிய பரமாத்மாவினிடத்திலும், நியம அத்தியயனாதிகளான விரதங்களாலே வேதங்களிலும் நிஷ்டைபொருந்தின எனக்கு, உண்டான குறைவைச் சொல்ல வேண்டுமென்று வினயத்துடனே விக்ஞாபனம் பண்ணின வியாசரைப்பார்த்து வேதமுனியான நாரதமுனிவர் சொல்லுகிறார்.

ஓ வியாசமுனிவரே! ஷாட்குண்ய பரிபூரணனான பரமபுருஷனுடைய களங்கமற்ற கீர்த்தியை நீர் பரிபூரணமாகச் சொல்லவில்லை. அந்தக் காரணத்தினாலே உம்முடைய ஆத்மாவுக்குச் சந்தோஷம் பிறக்கவில்லையென்று நினைக்கிறேன். மிகுதியாகப் பரமாத்மாவினுடைய குணங்களை நீர் ஸ்துதிபண்ணாமற் போனதினாலே முன்சொன்ன உம்முடைய பரிபூரண க்கியானங்களுங் குறைந்தன. வாரீர் முனிசிரேஷ்டரே! தருமமுதலான புருஷார்த்தங்களும், அதன் சாதனங்களும், விஸ்தாரமாக எப்படி வர்ணிக்கப்பட்டனவோ, அப்படிச் சர்வத்திர பரிபூரணனான வாசுதேவனுடைய மகிமை விஸ்தாரமாக வர்ணிக்கப்படவில்லை. எவ்வாறு சொற்கள் மிகுதியான ஆச்சரியங்களுக்கு இடமாகியிருந்தாலும், உலகங்களுக்கெல்லாம் பாவனமான ஸ்ரீ ஹரியினுடைய புகழை ஸ்துதி செய்யவில்லையோ அந்தச்சொற்களை மனதிலே பரமாத்மானுபவம் பண்ணுகிற ஜனங்கள் காகங்களிறங்குந் துறையென்று சொல்லுவார்கள். அதேனென்றால் அதிமனோகரமான பிரம்மத்தினிடத்தில் களிக்கிற பரம அம்ஸமுனிவர்களாகிற ராஜஹம்ஸங்கள் அவ்விடத்தில் களிக்கமாட்டா. ஆகையால் யாதொரு பிரபந்தத்தில் சுலோகப்பிரதிசுலோகங்களும் இலக்கணப்பழுதான சொற்களாயிருந்தாலும், அனந்தனுடைய கீர்த்திகளுக்கு உரியதாகிய நாமங்களை ஒருவர் சொல்லுகிறகாலத்தில் தாங்கள் கேட்டும், கேட்கிற ஜனங்களிருந்த காலத்தில்

தாங்கள் தியானஞ்செய்தும், மற்றொருவருமில்லாதகாலத்தில் தாங்களே படித்தும், சாதுஜனங்கள் சுகத்தை யடைகிறார்களோ, சகல ஜனங்களையும் பாவனஞ் செய்கிற அந்தப் பிரபந்தமே சிலாக்கியமானது. பலாபேக்ஷை யில்லாமற் செய்த கருமங்களும் அச்சுதனிடத்தில் பக்தியில்லாமற்போனால் பிரகாசிக்கமாட்டா. பிரகிருதி சம்பந்த நீங்கிய ஜீவஸ்வரூப சாக்ஷாத்காரமும் ஜீவசரீரகனை பிரம்மோபாசனத்துக்கு அங்கமாகாமற்போனால் அது மிகவும் பலமில்லாததேயாம். இப்படித் தன்னை யனுஷ்டிக்குங் காலத்திலும் தான் பலன்களைக் கொடுக்குங் காலத்திலும் வெகு சிரமத்தைக் கொடுக்கிற கருமங்கள் அச்சுதனிடத்தில் சமர்ப்பிக்கப்படாதபடியினாலே ரஜோகுண தமோகுணங்களை விலக்கிச் சத்வவிருத்தியை ஜனிப்பிக்கமாட்டாமற் போனபின்பு என்பிரகாசிக்கும்? ஆகையால் வாரீர்மகானுபாவரே! அமோகமான க்கியானத்தை உடைத்தாகியும், பரிசுத்தமான கீர்த்தியையுடைத்தாயும், பரார்த்தத்திலே விருப்பமுண்டாகியும், சத்தியத்திலும் மெய்ஞ்ஞானத்திலும் ருசியுண்டாகியும், உசிதவிரதங்களை அனுஷ்டித்துமிருக்கிற தேவரீர் சகலமான சமுசாரங்களுடைய பந்தங்களை விலக்கப்பட்ட திரிவிக்ரமனுடைய திவ்ய லீலைகளைத் தியானஞ்செய்து சாக்ஷாத்காரஞ் செய்யவேண்டும். அந்தப் பகவானுடைய லீலைகளைப்பார்க்கிலும் வேறான தருமங்களை நினைத்தும் விரும்பியும் சொல்லுகையால், அந்தந்தத் தருமங்களை, நிச்சயித்த ஜனங்களுக்கு அந்த ஈனதருமங்களுடைய போகங்களிலேயும், ஸ்வரூப க்கியானங்களினாலேயும் தேறித் தெளிந்தவர்களுக்கு ஓரிடத்திலும் நிலைகொள்ளாமலிருக்கிற புத்தியானது, பெருங்காற்றில் அடிபட்ட கப்பல்போல் தன்னிலையில் ஒருகாலத்திலும நிற்கமாட்டாது. சுபாவமான ஆசையுள்ள ஜனங்களுக்குத் தருமத்தைப் போதிக்கவேண்டி இழிவான விதிகளைச் சொல்லுகிறது மிகவும் கரைகடந்த சொற்கள். அந்தச்சொற்களாலே சொல்லப்படுகிறதே தருமமென்று நிச்சயித்த ஜனங்கள் அது ஈனதருமமென்று அதைத் தவிர்ந்து சிலாக்கிய தருமமான ஹரிசரித்திரங்களை விரும்பமாட்டார்கள். சகலலோகநாதனுடைய ஆதியந்தமில்லாத மகிமையை நினைத்து அவன் கைங்கர்யரூபமாக அனுஷ்டிக்கிற நிசவிருத்தி தருமங்களாலே வருகிற சுகத்தை அறிந்து அதன் இலக்ஷணந் தெரிந்தவன் எவன்தான் விரும்பமாட்டான்? பிரகிருதி குணங்களாலே பரவசமாகி அபிமானத்துடனே கூடிய ஜனங்களுக்கு உபயவிபூதி நாயகனாகிய ஸ்ரீஹரியுடைய திவ்யசரித்திரங்களைத் தெரியச்சொல்லவேண்டும் ஸ்வாமியென்று சொல்லி மறுபடியும் சொல்லுகிறார்.

அபக்குவமான மனதையுடைத்தானவன் வர்ணாச்சிரமத்துக்கு யோக்கியமான தருமங்களை ஸ்ரீஹரியினுடைய சரணகமலங்களைப் பஜனஞ்செய்து, அந்த ஜன்மத்தைவிட்டு நிகிருஷ்டமான ஜன்மத்தை எடுக்கையிலும், எதாகிலும் ஒரு ஜன்மத்தில் அந்த அசுபத்தைத்தவிர்ந்து உத்தமகதியையடைந்தானாகில், தனக்கு உசிதமான வர்ணாச்சிரமதருமங்களைப் பலாபேக்ஷையைவிட்டு அனுஷ்டித்து ஸ்ரீஹரிபஜனஞ்செய்கிறபேர்கள் அற்புதமான பரமபதத்தை அடைகிறதற்குச் சொல்லவேண்டியதென்ன? ஒவ்வொருவரும் அவ

